# அஹோபிலம்

## (சிங்கவேள்குன்றம்)



H.H.45th Jeear of
Sri Ahobila Math

அஹோபிலே காரூடசைல மத்யே ।
க்ருபாவஸாத் கல்பித சன்னிதானம் ॥
லாமியா சமா அலிங்கித வாம பாகம் ।
லஷ்மி ந்ருசிம்மம் சரணம் ப்ரபத்யே ॥

ஜவாலா அஹோபில மாலோ க்ரோட காரஞ்ச பார்கவா:
யோகநந்த சத்ரவட பாவனோ நவ மூர்த்திய:

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருசிம்ஹபரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ லக்ஷ்மீந்ருசிம்ஹாதி ஸுப்ரபாதம்

(30 வதுபட்டம் ஸ்ரீமதமுகிய சிஹ்கர் அருளிச்செய்தது)

கௌஸல்யாஸுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே ।
உத்திஷ்ட்ட நரஶார்தூல! கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம் ॥ 1

ஸ்ரீமாந் ராமாநுஜார்யோ யதிபதிரகிலாந்
த்ராதுகாமஸ் ஸ்வஶிஷ்யாந்
பாஷ்யம் ஶாரீரகார்த்தப்ரகடநமகரோத்
பாஹ்யசித்தாந்தபேத்தா ।
யஸ் தஸ்மிந் க்ஷுப்யமாணே கதககுலவசோ-
வஜ்ரபாதைஸ் ஸ பூய:
ஸாக்ஷாதுத்ப்ரேக்ஷ்யமாணோऽபவதிதி ஜயதாதத்
ஸ்ரீநிவாஸோ யதீந்த்ர: ॥ 2

தவ ஸுப்ரபாதமருணாப்ஜலோசநே!
தருணேந்துபிம்பவதநேऽகமோசநே! ।
ஶரணாகதார்த்திஹரணாய தீக்ஷிதே !
கருணாரஸௌகவருணாலயேக்ஷிதே ॥ 3

தவஸுப்ரபாதமமரேந்த்ரஸுந்தரி!
கரபல்லவாந்த கலிதோருமாலிநி! ।
க்ஷணருக்ஸஹஸ்ர துலிதாங்கஸெலபகே !
கநகாஞ்சிதோருமணிகுண்டலாஞ்ச்சிதே! ॥ 4

தவஸுப்ரபாதமஸுராரி வல்லபே !
நிஜவல்லபாங்கஸரஸீ ஸரோருஹே! ।
கரபல்லவாத்த ஜலஜாத குட்மலே !
ரவிகோடிபாசி குருவிந்த மௌளிகே! ॥ 5



Price - Rs. **20-00**

தவ ஸுப்ரபாதமகிலார்த்திபஞ்ஜநி!
ப்ரணதார்த்த பக்தஜந சித்தரஞ்ஜநி! ।
வரதாபநீய விதிதாத்மவைபவ-
ப்ரியவக்த்ரசந்த்ர ஸுசகோரலோசநே! ॥ 6

தேவாஶ்சதுர்முக புரந்தர ஶங்கராத்யா:
சித்தாஸ்ஸநாதந ஸநந்தந நாரதாத்யா: ।
த்வாமர்ச்சிதும் விவிதபுஷ்பகராஶ்சரந்தி
லக்ஷ்மீந்ருகேஸரிவிபோ! தவ ஸுப்ரபாதம் ॥ 7

தேவோ திவாகர இஹ ப்ரதிதப்ரகாஶோ
திவ்யை: கரைஸ்த்வதநகாங்க்ரியுகம் ஸஹஸ்ரை: ।
ஸமவாஹிதும் ப்ருஶமுதேதி ஹரேர் திஶாயாம்
லக்ஷ்மீந்ருகேஸரிவிபோ! தவ ஸுப்ரபாதம் ॥ 8

வேதாஶ்ச ஸாமயஜுராதய ஆவிபாந்தி
ஶப்தைரலக்ஷிதகுணை: ஸ்வகுணம் ஸ்துவந்த: ।
த்வல்லிங்கநாம குணகீர்த்தந லப்தபாவா:
லக்ஷ்மீந்ருகேஸரிவிபோ! தவ ஸுப்ரபாதம் ॥ 9

விப்ரா: ஸ்வநுஷ்ட்டிதகரி,ட்ட குணக்ரியாத்யா:
ஸ்நாதா விஶுத்தமநஸோ விமலைர்வசோபி: ।
த்வாம் ஸ்தோதுமத்ய விவிதை: ப்ரணதாஶ்சரந்தி
லக்ஷ்மீந்ருகேஸரிவிபோ! தவ ஸுப்ரபாதம் ॥ 11

தேநு: புரந்தரபுராந்தரபூஷணம் ஸா
த்வத்கிங்கரத்வ கரணாய தராமவாப்ய ।
த்வத்த்ருஷ்டிபாவித ஸுதாம ஸுதா ஸுதாராம்
ஆகாங்க்ஷதே நரஹரே! தவ ஸுப்ரபாதம் ॥ 12

ப்ருத்யோऽஹமத்ய யதிரூபமுபேயிவாம்ஸ்தே
பாதாம்புஜத்வய பரீசரணாய யத்த: ।
ஜாகர்மி விஶவகுண நிர்மித நர்மஶல !
லக்ஷ்மீந்ருகேஸரிவிபோ ! தவ ஸுப்ரபாதம் ॥ 13

வாராஶிராஜதநயா நயநாம்புஜாத-
மாத்வீரஸஜ்ஞ நயநாக்ய மிளிந்தயுக்மம் ।
ஸஞ்சாரயாத்ய விநதேஷுததீயபக்தி-
ஸாரக்ரஹாய ந்ருஹரே! தவ ஸுப்ரபாதம் ॥ 14

ஸஹ்யாப கோத்தர தரங்கவிபங்கஸங்க-
துங்காங்கஶீதிம மருஜ்ஜடி மோத்தரங்கே ।

ரங்கே விஹாய ருசிமத்ர விராஜஸே த்வம்
ஸ்ரீரங்கநாயகவிபோ! தவ ஸுப்ரபாதம் ॥ 15

நாராயணாத்ரிவிஸரத் விபுலஸ்ரவந்தீ
நிஷ்க்ராந்த நிர்ஜர ஜலஞ்ஜல காடஶப்தை: ।
அஸ்ப்ருஷ்டமாநஸ இவாத்ர விஹாரகாங்க்ஷீ
த்வம் பாசி வேங்கடபதே! தவ ஸுப்ரபாதம் ॥ 16

கோபீக்ருஹாந்தருபகல்பித மந்த்தநாத்த-
ஹ்யங்கவீநஹ்ருதி கல்பபித ந்ருத்தஜாதம் ।
அத்யாபி தத்த்யமிஹ கர்த்துமிவாசி தாத்ருக்-
ரூபோ யதூத்தமவிபோ! தவ ஸுப்ரபாதம் ॥ 17

இத்த்தம் ரமாந்ருஹரி ரங்கதுரீண ஶேஷ-
ஶைலேஶ யாதவகுலாதிப ஸுப்ரபாதம் ।
பக்த்யா பரம் வ்யதநுதாகிலஸாதுபாவ்யம்
ஸ்ரீ ஸ்ரீநிவாஸ நிகமாந்தயதிர் விஶுத்த: ॥ 18

ஸ்ரீமதே ஸ்ரீவண்ஶட தோப ஸ்ரீ ஸ்ரீநிவாஸ நிகமாந்த யதீந்த்ர மஹாதே ஶிகாய நம:

# சிஹ்கவேள் குன்றம்

வடக்கே பாரத தேவியின் பனிக்கிரீடமாக இமயம். தெற்கே பாரத தேவியின் அலங்கார ஆபரணமாக, தெவிட்டாத மேற்கு - கிழக்கு மலைத் தொடர்கள்.

மேற்குத் தொடர்ச்சி மலை அவள் அழகின் மோகமூட்டும் ரூபம். குளுமையாகக் கண்டு குதூகலிக் கலாம். கிழக்குத் தொடர்ச்சி மலையில் இயற்கையின் சுந்தர ரூபத்துடன் நிற்காமல், ஆன்மீகத்தின் சௌந்தரிய ரூப த்தையும் தரிசிக்கலாம்.

மகா சர்ப்பமாக ஆதிசேஷன் சுருண்டு கிழக்கு மலைத் தொடராகப் படுத்திருக்கிறான் என்பது ஐதீகம். படமெடுத்த தலைப்பகுதி திருபப்பதி. நீண்டு சுருங்கும் லால்பகுதி ஸ்ரீசைலம். மத்திய உடல் பகுதி அஹோபி லம். மூன்றுமே தெய்வீகத் திருத்தலங்கள்!

திருப்பதிக்கும் ஸ்ரீசைலத்துக்கும் இல்லாத கூடுதல் பெருமை அஹோபிலத்துக்கு உண்டு. உண்மையான பக்தியும் உடலுறுதியும் இருந்தால் மட்டுமே அஹோபிலத்தின் நவ நரசிம்மர்களைத் தரிசித்துப் பரவசம் கொள்ள முடியும்!

நாராயணனின் மற்ற அவதாரங்களிலிருந்து வேறுபட்டது நரசிம்ம அவதர்ரம். ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் போலல்லாமல், இது கண

நேரத்தில் தரிக்கப்பட்ட அவதாரம், அதேபோல் மற்ற அவதாரங்களைவிடக் குறைவான நேரமே இந்தந அவதாரம் பூமியில் நிலைத்திருந்தது. உலக மக்களுக்காகவும் தேவர்களின் அபயக்குரலுக்காகவும் எடுக்கப்பட்டை மற்ற அவதாரங்கள் போலல்லறிாமலல், இந்த அவதாரம் ஒரு தனி நபருக்காக, உண்மையான பக்திக்குப் பரிசாக எடுக்கப்பட்ட அவதாரம்.

தெய்வம், பிரபஞ்சம் முழுவதும் ஒவ்வொரு புள்ளியிலும் வியாபித்திருக்கிறது என்பதைத் தெளிவாக நிலைநாட்ட நாராயணன் மேற்கொண்ட திருஅவதாரம். மனிதனாகவும் அல்லாமல், மிருகமாகவும் அல்லாமல், இரண்டுக்கும் இடைப்பட்ட தோற்றத்துடன் மகா உக்கிரமாக வெளிப்பட்ட அவதாரம்.

எந்தத் தோற்ரம் ஹிரண்யகசிபுவின் இதயத்தில் மாபெரும் அச்சத்தை உண்டுபண்ணியதோ, அதே தோற்றம்தான் பிரகலாதனுக்கு மிக்க கருணை உடிவாகக் காட்சியளித்தது. எந்த விழிகள் அசுரனை அழிகள்தான் தன் பக்தனுக்குக் கருணையைக் குறைவு இல்லாமல் பொழிந்தன. எந்த மடியும் தொடைகளும் அக்கிரமக்காரனின் பலிபீடமாக மாறினவோ, அதே மடியும் தொடையும்தான் அருள் புரியும் அன்னை லக்ஷ்மியின் அழகான சிம்மாசனமாக அலங்கார மானது. அப்பேர்ப்பட்ட நரசிம்மர் அவதரித்த திருத்தலம் அஹோபிலம்.

'அஹோபிலம்' என்ற பெயர் எப்படி வந்தது ?

நாராயணனை நரசிம்மனாகத் தரிசிக்கும் ஆர்வத்துடன் கருட பகவான் இத்தலத்தில் அமர்ந்து கடும்தவம் செய்தார். கருட'னின் தவத்தை மெச்சி அவருக்கு நரசிம்மராகக் காட்சியளிக்க திருவுளம் கொண்டார் பரந்தாமன்.

சத்திய சொரூபமாக, மகாபுருஷனாக, நெருப்பின் உக்கிரத்தோடு நரசிம்மர் அம்மலைத் தொடரில் ஓர் உயரமான குகையில் அவருக்குக் காட்சியளித்தார்.

## என் சிங்கத்தின் பெருமையும் அற்புதமும்.

கருடன் அங்கு பறந்து சென்று வீழ்ந்து வணங்கினார்.

பர்வதங்களின் உயரத்தில் மாபெரும் குகையில் நரசிம்மராக எழுந்தருளிய இறைவனைத் தரிசித்து கருடன் பரவசமடைந்தார். 'அஹோபிலம், மஹாபலம்' என்று துதித்துப் பணிந்தார். இக்காரணத்தால்தான் 'அஹோபிலம்' (பிலம் என்றால் குகை) என்று பெயர் வந்தது. கருடன் தவம்செய்த மலை என்பதால், இம்மலைத் தொடர் 'கருடாசலம்' என்று இன்றைக்கும் அழைக்கப்படுகிறது.

எந்த ஆயுதமும் இல்லாமல் விரல்களாலேயே ஹிரண்யனைக் கிழிக த்து சம்ஹாரம் செய்த நரசிம்மரின் பலம்கண்டு வியந்த தேவர்கள், 'ஆஹா, என்ன பலம்!' என்று ஆர்ப்பரித்ததால் 'அஹோபலம்' என்றழைக்கப் பெற் றது என்றும் சொல்லலாம்.

திருமங்கையாழ்வார் தன் திருப்பாடல்களில் 'தெய்வங்களால் மட் டுமே சென்று தரிசிக்க முடியும்!' என்று அஹோபிலத்தைக் குரிப்பிட்டுள் ளார். அழகான தமிழில் அஹோபிலத்தை 'சிங்கவேல் குன்றம்' என்றழை க்கிறார்.

உண்மையான பக்தி இருந்தால் வந்து தரிசிக்கட்டும் என்ரு வனமும் விலங்குகளும் அடர்ந்த குகைகளில் நாராயணன் தன்னை வெளிப்படுத்தி ய புண்ணியத் தலம் அஹோபிலம்.

மேல் அஹோபிலம்-கீழ் அஹோபிலம் என்று இரண்டு தளங்களாக அஹோபிலம் அமைந்திருக்கிறது.

ருத்ர ரூபமாக மட்டுமே அறியப்பட்ட நரசிம்மர் தன் மற்ற தோற்றங்க ளையும் சேர்த்து ஒன்பது நரசிம்மர்களாக எழுந்தருளியிருப்பது மேல் அஹோபிலத்தில் மட்டும்தான்.

பிரகலாதனின் பிரசித்திபெற்ற சரித்திரம் தெரிந்தவர்க் கெல்லாம் ஹிர ண்யனை அழித்த ருத்ர நரசிம்மரைப் பற்றித் தெரியும். மற்ற நரசிம்மர்கள்?

ஆவல் அஹோபிலத்துக்கு அழைத்துப் போகிறது.

கிழக்குத் தொடர்ச்சி மலைகளில் நல்லமலைப் பகுதியில் அமைந்திருக் கிறது அஹோபிலம். இருள் அடர்ந்து கருங்கானகமாக இருந்ததால் 'நல்ல (தெலுங்கில் கறுப்பு என்று பொருள்) மலை என்று பெயர் பெற்றது.

கீழ் அஹோபிலத்தில் பிரகலாத வரதரின் ஆலயம்.

மேல் அஹோபிலத்தில் மலைச்சாரலின் ஆலயம்.

மேல் அஹோபிலத்தில் மலைச்சாரலின் மடிப்புகளில், மறைவான குகைப் பகுதிகளில் மகத்துவம்மிக்க நவநரசிம்மர்கள் அருள்பாலிக்கிறார் கள்.

பேருந்துகளோ, தனியார் வாகனங்களோ, மேல் அஹோபிலத்தின் குறிப்பிட்ட பகுதிவரை கொண்டுவிடத் தயாராயிருக்கின்றன. அதற்கப்புற ம், ஆண்டவன் கொடுத்த கால்களே நம்மை நகர்த்தும் சக்கரங்கள்.

கிருதயுகத்தில் இப்பகுதியில் ஹிரண்யனின் அரணமனை அமைந்தி ருந்தது. பிரகலாதனின் பிரார்த்தனைக்குச் செவிசாய்த்து, ஆயிரம் தூண்க ள் கொண்ட அரண்மனை மண்டபத்தில் ஒரு தூணை உதைத்துப் பிளந்து ந

சென்னையிலிருந்து கர்நூல் அல்லது நந்தியால் பஸ் முலமாகவும் செல்லலெம் 9கோயம்பேடு) அல்லகட்டாவில் இறங்கவும்.

## தகவல் பலகை !

ஆந்திர மாநிலத்தில் கர்னூல் மாலட்டத்தில் இருக்கிறது அஹோபில ம். ஹைதராபாத்திலிருந்து சுமார் 330 கி.மீ. தொலைவு. கடப்பாவிலிருந் து 112 கி.மீ. நந்தியாலிலிருந்து 65 கி.மீ.

எந்த ஊரிலிருந்து வந்தாலும், அல்லகட்டா என்ற ஊரைக் கடந்துதா ன் அஹோபிலத்துக்கு வந்து சேரவேண்டும். அஹோபிலத்துக்கு மிக நெருக்கமான பெரிய ஊர் அல்லகட்டா. அல்லகட்டாவிலிருந்து சுமார் 24 கி.மீ. தொலைவில் இருக்கும் அஹோபிலத்தை அடைய பேருந்துகள், வேன்கள் கிடைக்கும்.

தமிழ்நாட்டிலிருந்து அஹோபிலம் செல்ல விரும்புபவர்கள், சென்னை யிலிருந்து கடப்பாவுக்கு ரயில் அல்லது பேருந்து மூலமாகச் சென்று, அங் கிருந்து அல்லகட்டா வழியாக அஹோபிலத்துக்குப் பேருந்துப் பயணம் மேற்கொள்ளலாம.

அஹோபிலத்தில் தங்குவதற்கு திருப்பதி தேவஸ்தானத்தின் விடுதி உண்டு. இங்கு ஐம்பது ரூபாயிலிருந்து அறைகள் கிடைக்கும்.

அஹோபில மடத்திலும் வசதியான அறைகள் கிடைக்கும். இருநூறி லிருந்து முந்நூறு வரை வாடகை. (வெளியே போகும்போது மறக்காமல் ஜன்னல் கதவுகளைச் சாத்தித் தாழிட்டுப் போக வேண்டும்.) குரங்குகள் தொந்தரவு அதிகம்.

மடத்தின் தொலைபேசி எண்கள்: 08519-252025, 252045.

மடத்துக்கு முன்கூட்டியே தகவல் கொடுத்துவிட்டால், மலைகளில் வெவ்வேறு புள்ளிகளில் அமைந்திருக்கும் நவநரசிம்மர்கள் ஆலயங்களுக் கும் அழைத்துச் சென்று உடனிருந்து விளக்கம் சொல்லும் வழிகாட்டிகளை ஏற்பாடு செய்து தருகிறார்கள். (கட்டணம் ரூ. 250-லிருந்து 300 வரை)

வழிகாட்டி இல்லாமல் போனால், கரடுமுரடான மலைப் பாதைகளில் முட்டி வலிக்க ஏறி இறங்கி புறப்பட்ட ஆலயத்துக்கே மறுபடி வந்து சேரும் விபத்து நேரலாம். ஒரே மாதிரி இருக்கும் மலைப் பாதைகளில் வழி தவறி ப் போகவும் வாய்ப்பு உண்டு.

பெரிய அளவில் உண்வு விடுதிகள் கிடையாது. மடத்தையொட்டி எ ளிமையான கேன்ட்டின் ஒன்று இயங்கு கிறது. இது தவிர அஹோபில மட த்தில் பகலிலும், இரவிலும் இலவசமாக உணவு வழங்கப்படுகிறது.

ரசிம்மராக நாராயணன் வெளிப் பட்டதும், அசுரனை அள்ளி எடுத்து மடியில் கிடத்தி நகங்களால் கிழித்து வதம்புரிந்ததும் இங்குதான்.

நவநரசிம்மர்களைத் தரிசிக்க மனமும் உடலும் தயாராகிவிட்டன.

நான்கு திசைகளிலும் சூழ்ந்திருக்கும் மலைக் குன்றங்கள். அடர்ந்த மரங்கள். இசைபாடும் புள்ளினங்கள். ஆர்ப்பரிக்கும் வண்டுகள். குவிந்திருக்கும் முள் புதர்கள். பாதம்பட்டதும் புரண்டு அதலபாதாளத்தில் கொண்டு தள்ளக் காத்திருக்கும் சிறு கற்கள். முண்டும்முடிச்சுமான முரட்டுப் பாதை. போகும் வழியெங்கும் பசியுடன் படையாகப் பின்தொடரும் வானரங்கள்.

ராட்சஸக் கோப்பை விளிம்பில் நடப்பதுபோல் கவனமாக அடியெடுத்து வைக்க வேண்டியிருக்கிறது. தப்பான அடி எடுத்து வைத்தவர்கள் எப்படி நேரே வைகுந்தம் போய்ச் சேர்ந்தார்கள் என்ற விவரம் எச்சரிக்கை மணியடிக்கிறது. கரடிகளும் சிறுத்தைகளும் உலா வருவதுண்டு என்ற தகவல் தாவரங்களின் ஒவ்வோர் அசைவையும் உன்னிப்பாகக் கவனிக்க வைக்கிறது.

பாதங்களை அழுந்தப் பொருத்தி மலைச்சரிவில் எட்டு கி.மீ. ஏறியதும் பரந்த ஆகாயத்தின் நீலப் பின்னணியில் எதிரே பிரமாண்டமாக விசுவரூப மெடுத்து நிற்கிறது உக்ரஸ்தம்பம். இங்கே மலைப்பாறை இரண்டாகப் பிளந்து இரு வெவ்வேறு பகுதிகளாக நிற்பதைக் காணலாம் (ஓவியத்தின் உச்சிப் பகுதி). உற்றுப் பார்த்தால், பாறைப் பிளவின் அமைப்பில் நரசிம்மரின் திருமுகத் தோற்றத்தை உருவகப் படுத்திக்கொள்ள இயலுகிறது.

ஹிரண்யனின் அரண்மனையில் இருந்த இந்தத் தூணை நாராயணன் இரண்டாகப் பிளந்துதான் நரசிம்மராக வெளிவந்தார். அந்தக் கணத்தில் இந்தப் பிரதேசம் எப்படி பூகம்பமாக நடுக்கம் கண்டிரருக்கும் என்பதை இன்றைக்கும் உணர முடிகுறது.

மலையின் இந்தப் பகுதியைக் கவனமாகப் பார்த்தால், ஹிரண்யனின் அரண்மனை மண்டபமாக இருந்திருக்கலாம் என்ரு தோற்றமளிக்கும் இயற்கை அமைப்பு. உக்ரஸ்தம்பத்தின் உச்சிக்குப் போய் வருவது என்பது பிரம்மப்பிரயத்தனம். அப்படிப் போனவர்கள் நட்டு வைத்த காவிக்கொடி அந்த உச்சியிலிருந்து காற்றில் கையசைத்து வேடிக்கை காட்டுகிறது.

தூணைப் பிளந்து வெளிப்பட்ட நரசிம்மர் ஹிரண்யனை எந்த இடத்தில் வைத்து சம்ஹாரம் செய்தார்? அந்த இடத்தில்தான் ஜ்வாலா நரசிம்மரின் சந்நிதி அமைந்திருக்கிறது.

ஒன்பது நரசிம்மர்களில் முதலாவதாக ஜ்வாலா நரசிம்மர். தரிசிக்கப் பயணம் துலங்குகிறது.

கருடாசலம், வேதாசலம் மலைகளுக்கு இடையே அமைந்திருக்கும் 'அச்சலச்சாயா மேரு' என்றழைக்கப் பெறும் மலைக் குன்றம். பாதை வளைந்து நீள்கிறது. துருத்தியிருக்கும் பாறையின் மீதிருந்து மழைக்காலத்தில் சீறிப்பொழியும் நீர்வீழ்ச்சி, பவநாசினி ஆராகப்புரண்டு ஓடுகிறது. நீரின் விசையால் கீழே இழுத்துச் செல்லப்படாமல் இருக்க... மலைப் பாறைகளில் தடிமனான இரும்புச் சங்கிலி பதிக்கப்பட்டிருக்கிறது. அதைப் பிடித்துக் கவனமாக நகர்ந்து மேடேறியதும் ஜ்வாலா நரசிம்மரின் ஆலயம்.

மண்டி வளர்ந்திருக்கும் மரங்கல் மறைத்திருக்கும் கிடுகிடு பள்ளத்தாக்கை ஒட்டி, படமெடுத்த சர்ப்பம் போல் முன்தள்ளியிருக்கும் பாறை. பாறைக்குக் கீழே இயற்கையாக அமைந்திருக்கும் திறந்த குகை அமைப்பு. குகைக்குள் நடுநாயகமாக, முக்கியமான மூன்று விக்கிரகங்கள்.

மத்தியில் உக்கிர கொரூபமாக நரசிம்மர். எட்டுத் திருக்கரங்கள். இடது கால் மடக்கி, வலது காலைத் தொங்கவிட்டு வீற்றிருக்கும் கோலம். மடியில் ஹிரண்யன் இடது திருக் கரங்களில் ஒன்று அசைய விடாமல் அவன் கால்கள் இரண்டையும் சேர்த்துப் பற்றியிருக் கிறது. இரண்டு கரங்கள் அவன் வயிர்றைக் கிழித்து உள் அவயவங்களை வெளியே இழுக்கின்ரன் குடலை மாலையாக சூட்டப் பயன்படுகின்றன. மேலும் இரண்டு கரங்கள் சங்கு சக்கரங்களைத்தரித்திருக்கின்றன.

நரசிம்மர் பாதத்தினருகே, பிரகலாதன் பக்தியுடன தொழுது நிற்கிறான்.

நரசிம்மரின் ஆவேசம் காரணமாக இந்தக் குகை வெகுகாலம் நெருப்பு போல் கனன்று கொண்டிருந்தது. பச்சைப் புல்லைக் காட்டினால்கூட உடனே பற்றிக் கொள்ளும் அதனால்தான் நரசிம்மருக்கு 'ஜ்வாலா நரசிம்மர்' என்று பெயர் வந்தது.

ஹிரண்யவதம் சிற்பத்தின் வலதுபுறம் அவதாரத் தருணம். நாராயணன் சங்கு சக்கரதாரியாக, தூணைப் பிளந்து நரசிம்மராக வெளிப்படும் தோற்றம். இடதுபுறத்தில் நரசிம்மருக்கும் ஹிரண்யனுக்குமான போர்க்கோலம்.

குகை ஆலயத்துக்குச் சற்றுத் தள்ளி பாறை களின் இடுக்கில் அமைந்திருக்கிறது ரத்தகுண்டம். இங்குதான் நரசிம்மர் தன் குருதிக் கரங்களைக் கழுவிக் கொண்டார். அதனால் இந்தத் தீர்த்தத்துக்கு ரத்தகுண்டம் என்று பெயர். இயற்கையில் அமைந்திருக்கும் இந்தச் சனையில், நீரின் பிரதிபலிப்பு சிவப்பாக இருப்பதை இன்ரைக்கும் காணலாம்.

ஜ்வாலா நரசிம்மரின் தரிசனம் முடிந்தது. அடுத்தது? அஹோபில நரசிம்ம சுவாமி.

கருடாத்ரி, வேதாத்ரி மலை களுக்கு நடுவே அமைந்துள்ள பள்ளத்தாக்கில் பவநாசினி நதிக் கரையில் அமைந்துள்ளது அஹோபில நரசிம்மர் ஆலயம். இதுவே மேல் அஹோபிலத்தின் பிரதான ஆலயமாகக் கருதப்படுகிறது.

கீழ் அஹோபிலத்திலிருந்து எட்டு கிலோ மீட்டர் மலைப் பயணத்துக்கப்புறம், கடல் மட்டத்திலிருந்து 2,800 அடி உயரத்தில் மேல் அஹோபிலம் வந்ததும், அமைந்துள்ள ஆலயம் இது.

நவநரசிம்மர்களில் அதிகச் சிரமமில்லாமல் சென்று தரிசிக்கக்கூடியது. எளிமையான. சிறு கோபுரம். சம தலத்தில் நேரெதிரே, நூரடி தள்ளி உற்சவ மண்டபம்.

ஆலயம் ஒரே தளமாக இல்லாமல் குன்றத்தின் அமைப்புக்கேற்ப ஏற்ற இறக்கத்துடன் பரந்திருக்கிறது.

மூல சந்திதி அமைந்திருக்கும் பகுதி, திறந்த முதலையின் வாய் போன்ற குறுகலான குகை அமைப்பு. குகையின் மத்தியில் அஹோபில நரசிம்மர். உருவத்தில் சிறியவராக இருந்தாலும் நரசிம்மரின் உக்கிரம் அதிகம். மூலவருக்கு அருகிலேயே லக்ஷ்மி சமேதராக உற்சவர். நேரெதிரில் மாட சந்நிதியில் பிரகலாதன்.

மூலவர் சுயம்புவாகத் தோன்றிய மூர்த்தி. உக்கிர ரூபம். ஹிரண்யவதம் முடிந்ததும், தன் ஆக்ரோ, ரூபத்துடன் இந்தக் குகையில் வந்து தேவர்களுக்கும் கருடனுக்கும் காட்சியளித்தார்.

சீதையைத் தேடி ராமர் அலைந்தபோது. இங்கே வந்து நரசிம்மரை பூஜித்து வணங்கினார்.

குகையின் இன்னொரு புறத்தில் ஆச்சரியமாக ஒரு சிவலிங்கம். பக்கத்தி லேயே, ராமரின் திருக்கோலம்.

ஆதிசங்கரர் காபாலிகர்களிடம் தன் கரத்தை இழந்தபோது, இஃகே வந்து 'லக்ஷ்மி நரசிம்ம கராவலம்ப ஸ்தோத்திரம்' இயற்றினார். இழந்த கரம் மீண்டது. தன் வருகையை நிலைநிறுத்த இங்கே ஒரு சிவலிங்கத்தையும் பிரதிஷ்டை செய்து பூஜித்தார்.

ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த நரசிம்ம சுதர்சன சக்கரத்தையும் இங்கு காண முடிகிரது.

இதை அடுத்து, மகாலக்ஷ்மியின் அம்சமான செஞ்சுலக்ஷ்மித் தாயார் பத்மாசனத்தில் வீற்றிருக்கும் சந்நிதி அமைந்திருக்கிறது.

இன்றைய வசதிகள் இல்லாமல், பல நூற்றாண்டுகளுக்கு முந்தைய இடுக்கான இருள் குகைக்கு வந்து தரிசித்துச் சென்ற ஆன்மீகப் பெரியவர்களை எண்ணி உள்ளம் வியக்கிறது.

தீர்த்தம் வழங்கப்படுகிரது. சடாரி சாத்தப்படுகிறது.

சந்நிதிக்கு வெளியே பக்தர்களின் பாதங்கள் பட்டுவிடக்கூடாது என்று இரும்புத் தடுப்புக்குள் வட்டமாக ஒருபகுதி. இங்கே என்ன மர்மம் புதைந்திருக்கிறது? ஆர்வம் விசாரிக்கச் சொல்கிரது.

இது வெகு காலமாகத் திறந்த குகையாக இருந்தது. உள்ளே இருள் மண்டிக்கிடக்கும். பாதாளத்தில் இதே போன்றதொரு ஆலயம் இருந்தது என்று சொல்லப் படுகிறது.

பதினாறாம் நூற்றாண்டுத் துவக்கத்தில் (1513), இங்கு ஆறாம் ஜீயராக இருந்த ஸ்ரீ செஷ்ட பராங்குச யதீந்திர மகா தேசிகர் இந்தக் குகைக்குள் இறங்கிப் போனார். வைகுந்தனைத் தரிசித்துவிட்டு அவர் வெளியே வர வேயில்லை. அதன் பின் அந்த குகை மூடப்பட்டுவிட்டது.

வெளியே உக்கிரமான வெயில் தகித்தாலும் குகைகள் சூழ்ந்த ஆலயத்தினுள் குளுமையாக இருக்கிறது. சந்தனமும், சுகந்தப் புகைகளும் மணக்கின்றன. இளைப் பாறும் மண்டபங்கள் இருக்கின்றன.

ஆலயத்தில் அமைந்துள்ள மண்டபத்தின் மேல்தளத்தில் அழகிய சிற்ப வேலைப் பாடுகளுடன் மேலும் ஒரு பதினாறு கால் மண்டபம். அங்கிருந்து கோபுர தரிசனம். அங்கு நின்று சுற்றிலுமுள்ள மலைக் குன்றங்களைக் காணக் காண.... இயற்கை ரகசியமாகப் பொத்தி வைத்திருக்கும் மற்ற நரசிம்மர்களை அடுத்து தரிசிக்கப் போகும் ஆர்வம் செலுத்துகிறது.

அடுத்து மாலோல் நரசிம்மர்.

லக்ஷ்மி க்ஷேத்திரம் என்று அழைக்கப்பெறும் வேதாத்ரி பர்வதம். இந்த மலைக் குன்றங்களில், கனகபாயா ஆற்றின் கரையில் அமைந்திருக்கிறது மாலோலரின் சிறு குகை ஆலயம்.

நரசிம்மரின் கோபம் தணித்து, மகாலக்ஷ்மி அவருடன் எழுந்தருளிய தலம் இது. மா என்பதுட அன்னை லக்ஷ்மியைக் குறிக்கிறது. லோலம் என்றால் காதல் என்று பொருள். அனனையைத் தன் இடது மடியில் இருத்தி சௌம்ய ரூபமாக, இடது திருக்காலை மடக்கி, வலது திருக்காலைத் தொங்கவிட்டு சுக ஆசனத்தில் நரசிம்மர் இங்கு வீற்றிருக்கிறார். வலது மேற்கரத்தில் சக்கரம். இடது மேற்கரத்தில் சங்கு. வலது கீழ்க்கரம் அருள் புரியும் அபயஹஸ்தம். இடது கீழ்க்கரம், இடது தொடையில் வீற்றிருக்கும் மகாலக்ஷ்மியைச் சுற்றி வளைத்திருக்கிறது.

மாலோல நரசிம்மருக்கு இன்னொரு சிறப்பும் உண்டு.

நவ நரசிம்மர்களில் எந்த மூர்த்தியை அடிப்படையாக வைத்து உற்சவரை அமைப்பது என்ர கேள்வி எழுந்தபோது, முதலாம் ஜீயரின் கனவில் நாராயணன், மாலோல நரசிம்மராகக் காட்சியளித்து சந்தேகத்தைத் தீர்

# அஹோபில மடம் உருவானது எப்படி?

பாரத தேசத்தில் ராமானுஜரைத் தொடர்ந்து, ஸ்ரீநாராயணனின் மேன்மைகளைத் தொகுத்துப் பல சம்ஸ்கிருதப் பாடல்களை இயற்றி, வைஷ்ணவத்துக்குப் பெருமை சேர்த்தவர் ஸ்ரீவேதாந்த தேசிகர்.

அவருக்குப் பின், அவர் மகன் வரதாச்சார்யர் இந்தக் கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்தார். ஆனால், அவரை அடுத்து அந்தப் பொறுப்பை ஏற்கத் தகுதியான வைஷ்ணவத் தலைவர்கள் இல்லாததால், ஒரு வெறுமை உணரப்பட்டது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் ஸ்ரீனிவாசாச் சார்யர் 1379-ல் அவதரித்தார். வேதாந்தத்தைப் பயின்று, அதில் விற்பன்னரானார். ஸ்ரீ நாராயணனின்மீது அளவிலா பக்திகொண்டு விளங்கினார். அவருடைய பத்தொன்பதாவது வயதில் நரசிம்ம சுவாமி அவர் கனவில் காட்சியளித்தார்.

''அஹோபிலத்துக்கு வா... அங்கே உனக்காக நான் காத்திருக்கிறேன்!'' என்று கனவில் உரைத்து மறைந்தார்.

ஸ்ரீனிவாசாச்சார்யர் அஹோபிலம் சென்று சேர்ந்த போது, மலைகளில் அவரை வரவேற்க, அங்கே வயதான ஒரு யோகி காத்திருந்தார். அருள்பொங்கும் விழிகளுடன், அறிவுச்சுடரான வார்த்தைகளுடன் அந்த யோகி, ஸ்ரீனிவாசாச்சார்யருக்குக் குருவாக விளங்கினார்.

முக்கியமான பல வேதாந்தங்களைக் கற்பித்தார். நரசிம்ம மந்திரத்தைப் பயிற்றுவித்தார். ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு த்ரிதண்டத்தை வழங்கி, சங்கு சக்கரங்களையும் வழங்கினார். பின்னர் சன்னியாசம் பூணச் சொல்லி உத்தரவிட்டார். அவருக்குச் 'சடகோப யதி' என்ற திருநாமத்தையும் குரு சூட்டி மகிழ்ந்தார்.

அப்போதுதான் சாட்சாத் நரசிம்மரே, தனக்கு குருவாக இருந்து அருள்பாலித்ததை ஸ்ரீனிவாசாச்சார்யர் உணர்ந்தார். இறைவனின் ஆக்ஞைப்படி துறவறம் மேற்கொண்டார்.

வைஷ்ணவத்தின் மகத்துவத்தைப் பாரினில் பரப்பவும் நிலைநிறுத்தவும் அவர் நிர்மாணித்ததுதான் அஹோபில மடம்.

மடத்தின் தலைவர் ஜீயர் என்றழைக் கப்பட்டார். தமிழில் அழகிய சிங்கர் என்றும் இவர்களை அழகாகக் குறிப்பிடுவது உண்டு.

ஸ்ரீவைஷ்ணவத்தின் முக்கிய நரம்பு மையமாக இன்றைக்கு அஹோபி ல மடம் விளங்குகிறது.

'ஸ்ரீவன் சடகோப யதீந்திர மகா இறைவனால் அழைக்கப்பெற்ற இந் த தொடர்ந்து, ஒரு புதிய பாரம்பரியம் வளர்ந்தது.

ஆழ்வார் திருநகரியில், மறைக்கப்பட்ட நம்மாழ்வாரின் கோயிலை மறுஸ்தாபிதம் செய்த பெருமை அவருக்கு உண்டு. இன்றைக்கும் புதிய பீடாதிபதியாக ஜீயராக பொறுப்பேற்றுக் கொண்டதும் ஆழ்வார் திருந கரிக்குச் சென்று நம்மாழ்வாரைத் தரிசனம் செய்துவிட்டுத் திரும்பும் வழ க்கம் உள்ளது.

ஏழாவது ஜீயரின் காலத்தில், கீழ்அஹோபிலக் கோயில் மற்ற மதத் தினரின் ஆளுகையில் ஆக்கிரமிக்கப்பட்டது. ஜீயரின் வேண்டுகோளுக் கிணங்கி, விஜயநகரத்தை ஆண்ட ரங்கதேவராயர் போரிட்டு ஆலயத் தை மீட்டுக் கொடுத்தார். அந்த வெற்றிச்சின்னமாக ஜயஸ்தம்பம் ஒன் று ஆலயத்தின் முகப்பில் எழுப்பப்பட்டது.

ஸ்ரீரங்கம் ஆலயத்தில் கிட்டத்தட்ட நான்கு நூற்றாண்டுகளாக ராஜ கோபுரம் முழுமையடையாமல் இருந்தது. ராஜகோபுரத்தைப் பூர்த்தி செய்யும் பெரும் பொறுப்பை 1979-ம் வருடம் அப்போதைய பீடாதிப தியாக இருந்த நாற்பத்துநான்காவது ஜீயர் ஏற்றுக்கொண்டார். அவ ருடைய இடைவிடாத முயற்சியால், இன்றைக்கு ஸ்ரீரங்கத்தில் கம்பீரமா க நிமிர்ந்து நிற்கிறது ராஜகோபுரம்.

அஹோபிலத்தைத் தலைமையகமாகக் கொண்டு திருப்பதி, ஸ்ரீரங் கம், காஞ்சி, சென்னை, ஹைதராபாத், பெங்களூர் போன்ற பாரதத்தின் முக்கியமான நகரங்களில் அஹோபில மடத்தின் கிளைகள் இயங்குகி ன்றன.

இன்றைக்கு மடத்தின் நாற்பத்தைந்தாவது ஜீயராக இருப்பவர் ஸ்ரீநாராயண யதீந்திர மதா தேசிகர்.

அஹோபில மடத்தின் ஜீயர்கள் ஆன்மீகப்பயணங்கள் மேற்கொள் ளுடன் சில குறிப்பிட்ட விக்கிரகங்களைப் பூஜைக்கென்று எடுத்துச் செல் கின்றனர். இதில் மாலோல நரசிம்மரின் உற்சவ விக்கிரகம் முக்கியமா னது.

அஹோபில நரசிம்மர்கள் தவிர, வேறு பல வைஷ்ணவ ஆலயங்க ளும் மடத்தின் மேற்பார்வையில் இயங்குகின்றன.

த்து வைத்தார். இன்றைக்கும் ஜீயர்கள் மாலோல நரசிம்மரின் விக்கிரகத்தையே உற்சவ மூர்த்திகளாக ஆன்மீக யாத்திரைகள் போகும் இடங்களுக்கெல்லாம் எடுத்துப் போகிறார்கள். உற்சவருக்குத் தினசரி பூஜைகள் செய்து வருகிறார்கள்.

அஹோபிலத்தின் நான்காவது நரசிம்மராகத் தரிசனம் தரப் போகிறவர், க்ரோட நரசிம்மர். இரண்டு அவதாரங்களின் கலவையாக வித்தியாசமாகக் காட்சியளிக்கும் இந்த நரசிம்மரை தரிசிக்கும் ஆவலுடன் மலைப் பயணம் தொடர்கிறது.

## படித்த குருகுலம் !

ந்ரசிம்ம அவதாரத்தின் மூலகாரணமே பிரகலாதன் தான். நாராயணனை முற்றிலும் வெறுத்த ஹிரண்ய கசிபுவின் மகனாகப் பிறந்தும் அந்த நாராயணன் நாமமே தன் மூச்சு என்று பிடிவாதமாக அந்தச் சிறுவன் அன்றைக்கு இல்லாதிருந்தால், நரசிம்ம அவதாரத்துக்கு அவசியமே நேர்ந்திராது. ஹிரண்ய கசிபுவின் அரண்மனை இருந்த பகுதி இதுதான் என்றால், பிரகலாதன் ஓடி விளையாடி, பாலகனாக உலாவந்ததும் இதே பகுதிதானே? அவனைப் பற்றிய அடையாளங்கள் இருக்கின்றனவா என்ற கேள்வி எழுகிறது.

யுகங்கள் மாறியும் மாறாமல் பிரகலாதனின் பதிவு இங்கே இருக்கிறது என்று பதில் வருகிறது. பிரகலாத மெட்டு (படி) என்றும் பிரகலாத மேடு என்றும் அழைக்கப்பெறும் பகுதியில்தான் பிரகலாதனின் அன்றைய குருகுலம் பயணம் பிரகலாதன் மெட்டு நோக்கித் திரும்புகிறது.

பாதை குறுகி விரிந்து, குறுகி விரிந்து விளையாடு கிறது.

வேதாத்திரி மலையின் வழுக்குப் பாறைகளின் சிறிய பிளவுப் பிடிப்புகளில். கவனமாகப் பாதம் பதித்து மெள்ள இறங்கினால், திடீரென்று ராட்சஸத் திமிங்கிலத்தின் முதுகு போன்றதொரு பாறை அமைப்பு. இந்தப் பகுதியே 'பிரகலாத மேடு' என்றழைக்கப் படுகிறது.

பிரகலாதன் படித்து விளையாடி நாராயணன் நாமத்தையே உச்சரிந்திருந்த குருகுலம் இங்கேதான் அமைந்திருந்தது. பாறை களைப் புரட்டி, ஒன்றன் மீது ஒன்று அடிக்கினாற்போன்ர இயற்கை அமைப்பு. பாறைகலில் படிந்திருக்கும் சிரு வட்டங்கள், புரியாத சில கோட்டு அமைப்புகள்- இவை பிரகலாதன் குருகுலத்தில் பயின்றபோது எழுததிப் பார்த்த லிபிகள் என்று சொல்லப்படுகிறது.

சிறு குன்றத்தின்மீது உயரத்தில் அமைந்திருக்கும் ஆலயம் சற்றுத் தொலைவிலிருந்தே பார்வையில் தட்டுப்படுகிறது. காலியும் வெள்ளையும் அடித்த செங்குத்தான படிகள் வரவேற்கின்றன.

சூழ்நிலையிலேயே தெய்வீகம். ஆரவாரமான பூமியிலிருந்து பெயர்த்து எடுத்துவந்து இந்த உயரத்தில் இறக்கிவிட்டது போன்றதொரு பிரமிப்பு.

படியேறும் முன், ஆலயத்தின் பக்கவாட்டில் சதுர வடிவில் ஒரு திருக்குளம் அமைந்திருக்கிறது. பார்கவ தீர்த்தம் என்று வழங்கப்பெறும் இந்தத் தடாகத்தில் நீர் வற்றியதே இல்லை. இதனால், இதற்கு அக்ஷய தீர்த்தம் என்றும் ஒரு பெயருண்டு, தடாகத்தின் பாசி படிந்த நீரில் ஆலயத்தின் பிரதிபலிப்பு மிதக்கிறது. மீன்கள் ரகசியமாக நீச்சலடித்துக் கொண்டிருக் கின்றன.

பார்கவ தீர்த்தம் என்ற பெயர் எப்படி வந்தது?

பார்கவ ராமர் என்று அறியப்பட்ட பரசுராமர், தீர்த்த யாத்திரை மேற்கொண்டபோது நரசிம்மரைத் தரிசிக்க இந்தத் தலத்துக்கு வந்திருந்தார். அவருடைய வேண்டுகோளுக்கு இணங்க, நாராயணன் தன்தசாவதாரத் தோற்றங்களிலும் ஒருசேர இந்தத் தலத்தில் அவருக்குக் காட்சியளித்தார்.

நரசிம்மரைத் தரிசிக்க வேண்டி, நூற்றுமுப்பது உயரமான படிகளில் ஏறும்போது இந்த உற்சாகத்தில் களைப்பு தெரிவதில்லை.

எளிமையான ஆலய அமைப்பு. நரசிம்மர் இங்கே ஹிரண்ய வதத் தோற்றத்தில், மடியில் அசுரனைக் கிடத்தி, இரு கரங்களால் அவன் வயிற்றைக் கிழிக்கும் நிலையில் காணப்படுகிறார். மற்ற கரங்களில் சங்கும் சக்கரமும் தரித்திருக்கிறார். ஹிரண்யனின் வலது கையில் உயர்த்திய வாள் அப்படியே உறைந்திருக்கிறது.

சுவாமியின் பாதத்தருகே, பிரகலாதன் தொழுத நிலையில் நிற்கிறார். பரசுராமருக்குக் காட்டிய பத்து அவதாரங்களும் சிற்பத்தின் தோரணத்தில் பதிவாகி இருக்கின்றன. சந்நிதிக்கு வெளியில், மகாவிஷ்ணுவின் விக்கிரகம் ஒன்றும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

புண்ணிய அஹோபிலத்தில் ஏழாவது நரசிம்மராகக் காணப்படுபவர், யோகானந்த நரசிம்மர். எட்டாவது, சத்ரவட நரசிம்மர். ஒன்பதாவதாக, பவன நரசிம்மர். இவர்களைத் தவிர, கீழ் அஹோபிலத்தில் பிரகலாத வரதராக எழுந்தருளியிருக்கும் நரசிம்மர். இவர்களைத் தரிசிக்கப் பயணம் தொடர்கிறது.

# அஹோபிலம் ஓர் அற்புத அனுபவம்

(சென்ற இதழ் தொடர்ச்சி...)

வேதாத்ரி மலைத்தொடரின் மேற்கில்,. தொலைவில் அமைந்திருக்கிறது யோக நரசிம்மரின் ஆலயம். மரங்கள் சூழ்ந்த பகுதியில் அமைந்திருக்கும் இந்த எளிமையான ஆலயத்தில், நரசிம்மர் யோக முத்திரை தரித்துக் காட்சியளிக்கிறார்.

ஹிரண்ய வதம் முடிந்ததும் பிரகலாதனுக்கு நரசிம்மர் சில யோக முத்திரைகளைக் கற்பித்தார். அதன் ஒரு நிலையே இங்கு எழுந்தருளியிருக்கும் கோலம்.

நரசிம்மர் தென்திசை நோக்கி வீற்றிருக்கிறார். மேற்கரங்கள் இரண்டும் சங்கும் சக்கரமும் ஏந்தியிருக்கின்றன கீழ்க்கரங்கள் இரண்டிலும் இரு கால்களிலும் யோக முத்திரை பதித்திருக்கின்றன.

எட்டாவது நரசிம்மராகக் காணப்படுபவர் சத்ரவட நரசிம்மர்.

கருடாத்ரி மலையில், கீழ் அஹோபிலம் ஆலயத்துக்கு அருகில் கிழக்குத் திசையில் அமைந்திருக்கிறது சத்ரவட நரசிம்மரின் ஆலயம். இயற்கையின் சூழல். மேற்கு வானம் பின்னணியில் அழகான திரையாக விரிந்திருக்கிறது.

கரடுமுரடான பாதைகளுக்குப் பழக்கப்பட்டுப் போயிருக்கும் பாதங்கள், சீரான தார்ச்சாலை வழியே ஆலயத்தைச் சென்றடைய வழி இருப்பது கண்டு துள்ளுநடை போடுகின்றன.

ஆறு கால் முக மண்டபம். தூண்களில் ஆஞ்சநேயரின் அழகிய சிற்பங்கள்... தவிர வெவ்வேறு நரசிம்மர் சிற்பங்கள்.

அஹோபில நரசிம்மர்களிலேயே மிகவும் சுந்தர ரூபத்துடன் காணப்படுபவர் சத்ரவட நரசிம்மர். குடை போன்ற ஆலமரத்தடியில் வீற்ற நிலையில் காட்சி தந்ததால், நரசிம்மருக்கு இந்தத் திருநாமம் (சத்ர - குடை. வடம்-ஆலம்

அலங்கார புருஷராக, ஆபரணங்கள் தரித்து நரசிம்மர்.

இரண்டு மேற்கரங்களும் சங்கு, சக்கரங்களைத் தரித்திருக் கின்றன. வலது கீழக்கரம் அபயஹஸ்தமாக அருள்பாலிக்கிறது. இடது கீழக்கரம் இடது தொடையில் முத்திரையாகப் பதிந்திருக் கிறது.

தேவசபையில் ஆஹா, ஊஹூ என்று இரண்டு கந்தர்வ இசைக்கலைஞர்கள். ஹிரண்ய வதம் முடிந்து, உக்கிர நிலையி ல் இருக்கும் நரசிம்மரை அமைதிப்படுத்த, இந்த இரண்டு கந்தர் வர்களும் தங்கள் இசையால் முனைந்தனர். அவர்கள் இன்னிசை யை ரசித்து, நரசிம்மர் தன் தொடையில் தாளம் போடுகிறார் என் றும் சொல்லப்படுகிறது.

ஆலய முகப்பில் ஆஹா, ஊஹூ இருவரின் திருவுருவங்க ளும் அமையப் பெற்றுள்ளன.

ஒன்பதாவது நரசிம்மராக, பவன நரசிம்மர். கருடாத்ரி மலை யின் தென்புறம், அடர்ந்த காட்டுப் பகுதியில், பவன நதிக்கரை யில் அமைந்திருக்கிறது பவன நரசிம்மர் ஆலயம்.

ஒன்பது நரசிம்மர்களில் இந்த ஆலயத்துக்குச் செல்லும் பய ணமே மிகவும் கடினமானது. மூங்கில் காடுகளினூடே சீரற்ற பாத. நடந்து சென்றால் முட்டிகள் தேயும்.

டிராக்டர் போன்ற வாகனங்கள் மட்டுமே செல்லக்கூடிய கர டுமுரடான மண்பாதைகளில், வேறு ஏதாவது வாகனங்களில் சென்றால், எலும்புகள் கழன்றுபோவது போல் உதறும். அந்த அளவுக்குக் கடமுடா பாதை.

ஆனாலும், இந்த நரசிம்மரைத் தரிசிக்க அக்கம்பக்கத்துக் கி ராமங்களிலிருந்து கூட்டம் கூட்டமாக மக்கள் வந்துகொண்டிருக் கிறார்கள்.

முந்தின நாளே புறப்பட்டு, மிகக் கடினமான ஆறேழு கிலோ மீட்டர்களைக் கடந்து, திறந்தவெளியில் - மரத்தடியில் இரவை க் கழித்து, தரிசனம் முடித்துச் செல்லத் தயாராயிருக் கிறார்கள்.

அப்படி வரும் பக்தர்களில் பலர், கைகளிலும் சிறுகூடைக ளிலும் கோழிகளையும் சேவல்களையும் பலி கொடுப்பதற்காக

எடுத்து வருகின்றனர்.

பலிகளை நரசிம்மர் ஏற்பாரா?

இங்கே புழங்கும் நாட்டுப்புறக் கதை இதற்கு நல்ல பதில் தருகிறது.

கிருத யுகத்தில் இந்த மலைத் தொடர்களில் செஞ்சு என்றழைக்கப்பட்ட மலைவாழ் மக்கள் மட்டுமே வசித்து வந்திருக்கின்றனர். ஏழ்மையான குடும்பங்கள். காட்டில் வேட்டையாடி பசி தீர்த்துக் கொள்ளும் ஜனங்கள்.

வெளியுலகில் இருப்பவர்களுடன் வீண்வம்புக்குப் போகாத அமைதியான காட்டு மக்கள். அந்தக் குடும்பங்களில் பிறந்தவள்தான் செஞ்சு லட்சுமி. திருமகளின் மறு அவதாரமாகத் தோன்றியவள்.

பருவ வயதில் அவளையொத்த அழகிகள் யாருமிலர். அவள் கரம் பற்ற, ஆண்களுக்கிடையே போட்டா போட்டி. ஆனால், செஞ்சுலட்சுமிக்கோ ஸ்ரீ நாராயணன் பேரில் அளவிலாக் காதல்!

அஹோபில மலைகளில், பிரகலாதனுக்காக நரசிம்மர் அவதாரம் எடுத்தபோது, நரசிம்மரின் பார்வையில் இந்த செஞ்சுலட்சுமி தென்பட்டாள். காண்பவர் எல்லாம், நரசிம்மரின் கோர முகம் பார்த்து நடுநடுங்கி ஒளிய, செஞ்சுலட்சுமி மட்டும் அவரைத் தரிசித்ததும் நாணத்தால் தலைகுனிந்து நின்றாள்.

இந்த அவதாரத்தில் தனக்கிணையான துணை இவள்தான் என்று தீர்மானித்தார் நரசிம்மர். அவளைத் தன் துணையாக்கி, மலைவாழ் மக்களுக்குப் பெரும் அந்தஸ்து தந்தார்.

தன் பிரியமான மனைவிக்காக மாமிச உணவை வேட்டையாடிக் கொணர்ந்து கொடுத்தார்.

தங்களில் ஒருத்தியாகப் பிறந்து வளர்ந்து, நரசிம்மரின் கரம் பற்றிய அன்னை செஞ்சுலட்சுமிக்குப் பிரியமான உணவைப் படைப்பதற்காகவே இந்த மலைவாழ் இன மக்கள் இங்கே பலி கொடுத்து வணங்குகிறார்கள்.

பரம்பரை பரம்பரையாகச் சனிக்கிழமைகளில் நரசிம்மருக்கு பலி கொடுப்பதற்காக இங்கே வரும் குடும்பங்கள் உண்டு.

பவன நதிக்கரையில் அமைந்திருக்கும் ஆலயத்தில் ஏழு தலை ஆதிசேஷன் படமெடுத்துக் குடை பிடித்திருக்க, வீற்றிருக்கும் நிலையில் இருக்கிறார் லக்ஷ்மி நரசிம்மர்.

வலது மேற்கரத்தில் சக்கரம். இடது மேற்கரத்தில் சங்கு. அன்னை லக்ஷ்மியைத் தன் இடது மடியில் இருத்தி சாந்தரூபமாகக் காட்சியளிக்கிறார். இடது திருக்காலை. மடக்கி, வலது திருக்காலைத்தொங்கலிட்டு சுக ஆசனத்தில் நரசிம்மர் இங்கே தரிசனம் தருகிறார்.

வலது கீழ்க்கரம் சரணம் புரியும் பக்தர்களுக்கு அருளும் அபயஹஸ்தம். இடது கீழ்க்கரம், இடது தொடையில் வீற்றிருக்கும் அன்னை லக்ஷ்மியைச் சுற்றி வளைத்திருக்கிறது.

பவன நரசிம்மரைத் தரிசித்ததும் மேல் அஹோபிலத்தின் ஒன்பது நரசிம்மர்களையும் தரிசித்து முடித்த திருப்தி நெஞ்சில் நிறைகிறது.

கடுமையான பயணம் முடித்துத் திரும்பியவுடன், சற்று ஆசுவாசப்படுத்திக் கொள்வதற்காகக் கீழ்அஹோபிலம்.

இங்கே, நரசிம்மர் பிரகலாத வர்தராக எழுந்தருளியிருக்கிறார். ஆலயத்தில் நுழையு முன் தெற்கே புஷ்கரணி. சதுர வடிவக் குளத்தைச் சுற்றி, பாறைகளால் ஆன படிகள்.

கலங்கியிருக்கும் நீரில் நிறம் மாறும் வானமும் நகர்ந்தோடும் மேகங்களும் மிதக்கின்றன. சிற்சில இடங்களில் அதிக ஆழம் இருப்பதால் இந்தத் திருக்குளத்தில் நீச்சல் தெரியாத பக்தர்கள் இறங்கிக் தளிக்க வேண்டாமென்று எச்சரிக்கப்படுகிறார்கள். எனவே, குளித்தே ஆக வேண்டும் என்று இறங்கும் பக்தர்கள் அதிக கவனம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

குளத்தை அடுத்து, அலங்காரமான உயரமான கோபுரம். ஆலயத்தில் நுழைந்ததும் மூன்று பிராகாஸ்ரங்கள். முகப்பில் ரங்க மண்டபம், பதினாறாம் நூற்றாண்டின் அற்புதச் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தூண்கள்.

இந்தத் தூண்கள் அனைத்தும் கொள்ளை அழகு. திரும்பிய பக்கமெல்லாம் இசைக்கலைஞர்களும் நாட்டிய மங்கைகளுமா க சிற்பிகளின் சிங்காரப் படைப்புகள். மேல் அஹோபிலத்தில் தரிசித்துத் திரும்பிய நரசிம்மர்களைப் பற்றிய ஒரு நினைவூட்ட ல் போல் நரசிம்மரின் வெவ்வேறு தோற்றங்கள்.

அடுத்து ஒரு சிறு, மண்டபம். அதையடுத்து மூலவர் வீற்றிக் கும் திருச்சந்நிதி.

சந்நிதிக்கு வெளியே இருபுறமும் அமைப்பான திக்பாலகர் கள்.

கருவறையில் தீப ஒளியில் பிரகலாத வரதர் என்று அழைக் கப்பெறும் மூலவர்.

இங்கே நரசிம்மர் சாந்தசொரூபியாக, லக்ஷ்மி சமேதராகக் கிழக்கு நோக்கி இடது திருக்காலை மடக்கி, வலது திருக்காலை த் தொங்கவிட்டு, சுக ஆசனத்தில் வீற்றிருக்கிறார். வலது மேற்க ரத்தில் சக்கரம். இடது மேற்கரத்தில் சங்கு. வலது கீழ்க்கரம் அருள் புரியும் அபயஹஸ்தம். இடது கீழ்க்கரம், இடது தொடை யில் வீற்றிருக்கும் மகாலக்ஷ்மியை சுற்றி வளைத்திருக்கிறது. மூலவர் தவிர, சந்நிதியில் உர்சவ மூர்த்திகளாக பிரகலாத வரத ர், ஸ்ரீதேவி, பூதேவி, மற்றும் ஜ்வாலா நரசிம்மர்..

திருப்பதி வெங்கடாஜலபதி தனது திருமணத்துக்கு முன் இங் கே வந்து ஆசிகள் பெற்றுச் சென்றதாக ஐதீகம். அதனால் ஆல யத்தில் அவருக்கென்று தனி சந்நிதியும் இருக்கிறது. அங்கிருக் கும் மண்டபத்தில் திருக்கல்யாண கோலத்தில் இறைவன் எழுந் தருளுவது உண்டு என்பதால் இம்மண்டபத்துக்குக் கல்யாண மண்டபம் என்றும் பெயருண்டு. இவை தவிர, லக்ஷ்மி, ஆண் டாள், ஆழ்வார்களுக்கான தனி சந்நிதிகளும் அமைந்துள்ளன.

மூலவர் சந்நிதிக்கு நேர் வெளியேதுவஜஸ்தம்பம். புண்டி கைக் காலங்களில் கொடியேற்றி உர்சவம் நடைபெறும். ஆலய

த்தின் வெளிச்சுவர் அருகே நிமிர்ந்து நெடிதாக நிர்கிறது ஜயஸ் தம்பம். மற்ற மதத்தினர் ஆலயத்தை ஆக்கிரமித்துக் கொண்ட போது. இந்தப் பகுதியை ஆண்ட இந்து மன்னர்கள் அவர்களி டமிருந்து ஆலயத்தை மீட்டதன் நினைவுச் சின்னமாக இந்த ஜய ஸ்தம்பம்.

கீழ்அஹோபில தரிசனம் முடிவுக்கு வருகிறது.

நாராயணன் பத்து அவதாரங்கள் எடுத்தார். அதில் ஒற்றை அவதாரமான நரசிம்மரே இஹ்கே பத்து விதங்களாகத் தன்னை வெளிப்படுத்தி அஹோபிலத்துக்கு அற்புதப் பெருமை சேர்த்தி ருக்கிறார்..

## தொடரும் அன்னதானம்!

யோக நரசிம்மர் ஆலயம் அமைந்துள்ள பகுதியில் பசித்த வயிறுகளுக்கு குறைவில்லாமல உணவு வழங்கி பெரும்/தர்ம வானாக விளங்கி வந்தவர் காசிரெட்டி நாயனா என்பவர் இவ் வாலயத்தின் அருகிலேயே இன்னொரு யோக நரசிம்மர் ஆல யத்தையும் நிர்மாணித்திருக்கிறார் இவர். இங்கிருந்து இருபது கிலோம் மீட்டர் தள்ளி அமைந்துள்ள ஜ்யோதி நரசிம்மர் சந்நி தி அருகில் சமாதியடைந்தார்.

இன்றளவும், இங்கே அன்னதானம் தொடர்ந்து நடைபெற் று வருகிறது. அஹோபிலத்துக்குப் பசியுடன் வரும் யாத்ரீகர்க ளுக்கு நள்ளிரவாயிருந்தாலும், முகம் சுளிக்காமல் உணவு வழ ங்க இங்கே ஏற்பாடு செய்யப்படுகிரது என்பது நெகிவ்ச்சியூட் டும் ஒரு ஆச்சரிய செய்தி.

நன்மைகள் பல அருளும் நவ நரசிம்மர்கள்!

அஹோவிர்யம் அஹோசொர்யம், அஹோபாஹபராக்கரம்.

நாரசிம்மம் பரம் செய்வம் அஹோபிலம்

1. ஸ்ரீ அகோபில நரசிம்மர் : ஸ்வயம் வ்யக்த (தானாகவே தோன்றிய) இந்த ஸ்ரீ நரசிம்மப்பெருமான் வழிபட்டு வந்ததால் இந்தத் திருத்தலத்திற்கு கருடாத்ரி என்ற பெயரும் உண்டு. பிரம்மாவும் மற்ற தேவர்களும் இத்திருத்தலத்திற்கே வந்து ஸ்ரீ நரசிம்மப்பெருமானை வணங்கியதாகப் புராணம் கூருகிறது. ஹிரண்யகசிபுவை சம்ஹாரம் செய்த பிறகு கடுங்கோபமாக இருந்தவர் பின்னர் கோபம் குறைந்து. சாந்தியடைந்து தாயார் ஸ்ரீ மகாலட்சுமியுடன் ஆஹோபிலத்தில் பிரகலாதனுக்கும் மற்றவர்களுக்கும் தரிசனமளித்தார் என்பதும் வரவாறு. சுக்கிர தோஷத்தால் ஏற்படும் தோஷங்களை உடனடியாகப் போக்கி யருள்கிறார் ஸ்ரீ அகோபில நரசிம்மர்.

2. ஸ்ரீ வராகநரசிம்மர் : சகல கலைகள், இயல், இசை, நாடகத்துறைகள், வசனாதி திரவியங்கள், மந்திரசித்தி, நவரத்தின, கனகாபரணங்கள், நல்ல. செழிப்பான இல்லங்களில் வாழும் பாக்கியம் மற்றும் அஷ்ட ஐஸ்வர்யங்களையும் அருளவல்லவர். குருவினால் ஏற்படும் தோஷங்களையும் நீக்க வல்லவர் ஸ்ரீ வராகநரசிம்மர், நீதித்துறை, வேதங்கள் ஆகிய துறைகளில் உயர்ந்த நிலையை அருளவல்லவர்.

3. ஸ்ரீ மலோல நரசிம்மர் : மா என்பது நாமபிரானையும் லோலா என்பது ஸ்ரீ மகாலட்சுமியையும் குறிக் கின்றன. சங்குசக்கரதாரியாய் அபய ஹஸ்தத்துடன் அழகிய கோலத்தில் அகோபிலத்தில், மலையில் சிறு குகைக் கோயிலில் எழுந்தருளி அருள் பாலிக்கிறார். செவ்வாய் கிரகத்தினால் ஏற்படும் அனைத்து தோஷங்களையும் நீக்கியருள்கிறார். மனபயத்தையும் போக்கித் தைரியத்தை அருள்கிறார்.

4. ஸ்ரீ பால யோகானந்த நரசிம்மர் : புதன் கிரகத்தால் ஏற்படும் சகல தோஷங்களைப் போக்கும் இவர் வேதாத்ரி மலையின் மேற்குப் பகுதியில் எழுந்தருளியுள்ளார். பக்தப் பிரகலாதனுக்கு யோக பாடங்களைக் கற்றுக் கொடுத்தவர்.

5. ஸ்ரீ காருஞ்சன நரசிம்மர் : கேதுவினால் ஏற்படும் தோஷங்களை நீக்கும் இவர் ஞானம், வைராக்கியம், தீவிர பக்தி ஆகிய வற்றை அருள் செய்து. யாவரும் வணங்கிப் போற்றக்கூடிய ஞானிகள் மற்றும் மருத்துவ மாமேதைகளை உருவாக்க வல்லவர். கருடாத்ரி மலையில் மேற்குப் பகுதியில் காருஞ்சன மரத்தின் அடியில் எழுந்தருளியுள்ளார்.

6. ஸ்ரீ சத்ரவட நரசிம்மர் : சூரியனால் ஏற்படும் சகல தோஷங்களைப் போக்கி அருள்கிறார். நாட்டின் தலைமைப் பதவி, மற்றவர்களுக்கு ஆணையிடும் அதிகாரம். நீதி தவறாத பரிபாலனம் ஆகியவற்றை வழங்கவல்லவர். சத்ரவட மரத்தின் கீழ் இத்திருத்தலம் அமைந்துள்ளது. பத்மாசனக் கோலம் கொண்டு பேரழகுடன் காட்சி தருகிறார்.

7. ஸ்ரீ பாவனநரசிம்மர் : பாவன நதிக்கரையில் எழுந்தருளியுள்ளார். ராகு கிரகத்தால் ஏற்படும் தோஷங்களைப் போக்குகிறார்!

தேவையற்ற அதீத கற்பனைகள், தர்மத்திற்குப் புறம்பான கெட்ட எண்ணங்கள். செயல்கள், மனம் போனபடியெல்லாம் நடந்துகொள்வது. தீச்செயல்களைத் துணிந்து செய்வது. கொடுங்கோலாட்சி ஆகிய தீமைகளைத் தடுத்தாட் கொள்கிறார்.

8. ஸ்ரீ பார்க்கவ நரசிம்மர் சந்திரனால் ஏற்படும் சகல தோஷங்களையும் போக்குகிறார். பார்க்கவ தீர்த்தத்தின் அருகில் எழுந்தருளியுள்ளார். பரசுராமர் இவரை வணங்கிச் சென்றசாக ஐதீகம். இவரை வழிபட்டு வந்தால் சகல பாவங்களும் தீர்ந்து நிம்மதி உண்டாகும். கற்பனைத்திறன். எழுத்தாற்றல். கவிதை, குடும்பத்தில் மகிழ்ச்சி, கவலைகள் இல்லாத மனம். நோயற்ற நல்வாழ்வு. வெளிநாடு சென்று செல்வம் சேர்த்தல் ஆகிய பாக்கியங்களை அளித்தருள்கிறார்.

9. ஸ்ரீ ஜ்வாலா நரசிம்மர் : சனிபகவானின் தோஷங்களையும் போக்குகிறார். ஸ்ரீ மாதா மிருத்யுஞ்ஜயர் என்ற பெயரும் இவருக்கு உண்டு. கருடாசலம், வேதாசலம் எனப்படும் இரு

மலைகலுக்கிடையில் இருக்கிறார். தனது பக்தன் பிரகலாதனை க் காத்தருள, ஸ்ரீமாகாவிஷ்ணுவே ஸ்ரீ நரசிம்மப் பெருமானாக அவதார மெடுத்து ஹிரண்யகசிபுவை சம்ஹாரம் செய்த இடம் இது. பத்துக் கைகளுடன் தரிசன மளிக்கும் இநந்த நரசிம்மர் ஹிர ண்யனின் உடலைக் கிழிக்கும் கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

தீராத கடன்கள், தீராத நோய்கள். பகைவர்களின் தொல்லை கள் ஆகியவற்றிலிருந்து காத்தருள்கிறார். சிறந்த தொழிலதிபர் களை உருவாக்குகிறார்.

## நவநரசிம்மரையும் எப்படி தரிசிப்பது?

நவநரசிம்மர்களையும் பொதுவாக ஒரே நாளில் தரிசிப்பது என்பது இயலாத காரியம். இங்கு கொடுக்கப்பட்டிருக்கும் வரி சையில்தான் தரிசிக்க வேண்டும் என்பது வசதியாக இருக் காதுதான். வீடிகாலையிலேயே புறப்பட்டால், அஹோபில நர சிம்மர், உக்ரஸ்தம்பம், ஜ்வாலா நரசிம்மர், வராக நரசிம்மர், மாலோல நரசிம்மர், பிரகலாத மெட்டு, கரஞ்ச நரசிம்மர் தரிச னங்களை முடித்துக் கொள்ளும்போது பகல் பொழுது ஆகிவி டும். மதியத்திற்கு மேல் புறப்பட்டால் பார்கவ நரசிம்மர், சத்ர வட நரசிம்மர் இவர்களை தரிசித்துத் திரும்ப தனியாக ஒரு பொழுதை ஒதுக்கிக் கொள்வது உத்தமம்.

மேல் அஹோபிலத்தில் மலைச் சாரல்களில் நவ நரசிம்மர்க ளின் ஆலயங்கள், உக்ரஸ்தம்பம், பிரகலாத மெட்டு மற்றும் கீழ் அஹோபிலத்தில் பிரகலாத வரதர் ஆலயம்-இவை எங்கே அமைந்திருக்கின்றன? இத்துடன் கொடுக்கப்பட்டிருக்கும் வரைபடம் ஒரு முன்னோட்டம்.

1. ஜ்வாலா நரசிம்மர்
2. அஹோபில நரசிம்மர்
3. மாலோல நரசிம்மர்
4. க்ரோடகார (வராக) நரசிம்மர்
5. கரஞ்ச நரசிம்மர்
6. பார்கவ நரசிம்மர்
7. யோகானந்த நரசிம்மர்
8. சத்ரவட நரசிம்மர்
9. பவன நரசிம்மர்
10. உக்ரஸ்தம்பம்
11. பிரகலாத மெட்டு
12. பிரகலாத வரதர்


of Sri Nava Narasimha Swamy Temples in Nallamala
1 Jwala Narasimha 2 Ahobila 3 Malola 4 Kroda (VARAHA) 5 Karanja 6 Bhargava
7 Yogananda 8 Chatravata 9 Pavana A Ugra Stambham
C Prahallada Cave (SCHOOL) D Prahallada Varada (Sri Lakshmi Narasimha Swamy LOWER AHOBILAM)

## ஸ்ரீ ந்ருசிம்ஹ பஞ்சாம்ருத ஸ்தோத்ரம்

ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகள் ஸ்ரீ அஹோபில ந்ருசிம்ஹனை

மங்களாஶாஸநம் செய்த ஸ்தோத்ரம்

(பாத்மோத்தர புராணத்திவள்ளது)

அஹோபிலம் நாரசிம்ஹம் கத்வர ராம: ப்ரதாபவாந் ।
நமஸ்க்ருத்வா ஸ்ரீந்ருசிம்ஹம், அஸ்தெளஷீத் கமலாபதிம் ॥ 1

கோவிந்த கேஶவ ஜநார்தந வாஸுதேவ,
விஶவேஶ விஶ்வ மதுஸூதந விஶ்வரூப ।
ஸ்ரீ பத்மநாப புருஷோத்தம புஷ்கராக்ஷ,
நாராயணாச்யுத ந்ருசிம்ஹ நமோ நமஸ்தே ॥ 2

தேவாஸ்ஸமஸ்தா: க்கலு யோகிமுக்க்யா:
கந்தர்வ வித்யாதர கிந்நராஶ்ச ।
யத்பாதமூலம் ஸததம் நமந்தி
தம் நாரசிம்ஹம் ஶரணம் கதோஸ்மி ॥ 3

வேதாந் ஸமஸ்தாந் க்கலு ஶாஸ்த்ரகர்பாந்
வித்யாபலே கீர்த்திமதீம் ச லக்ஷ்மீம் ।
யஸ்ய ப்ரஸாதாத் ஸததம் லபந்தே
தம் நாரசிம்ஹம் ஶரணம் கதோஸ்மி ॥ 4

ப்ரஹ்மா ஶிவஸ்த்வம் புருஷோத்தமஶ்ச,
நாராயணோऽஸௌ மருதாம் பதிஶ்ச ।
சந்த்ரார்க்க வாய்வக்நி மருத்கணாஶ்ச,
த்வமேவ், தம் த்வாம் ஸததம் நதோஸ்மி ॥ 5

ஸ்வப்நேபி நித்யம் ஜகதாம் த்ரயாணாம்,
ஸ்ரஷ்டா ச ஹந்தா விபுரப்ரமேய: ।
த்ராதா த்வமேகஸ் த்ரிவிதோ விபிந்ந:,
தம் த்வாம் ந்ருசிம்ஹம் ஸததம் நதோஸ்மி ॥ 6

இதி ஸ்துத்வா ரகுஶ்ரேஷ்ட்ட : பூஜயாமாஸ தம் விபும் ।
புஷ்பவ்ருஷ்டி: பபாதாஶு தஸ்ய தேவஸ்ய மூர்த்தநி ॥
ஸாது ஸாத்விதி தம் ப்ரோசு : தேவா ரிஷிகணைஸ்ஸஹ ॥

**தேவா ஊசு :-**

ராகவேண க்ருதம் ஸ்தோத்ரம் பஞ்சாம்ருதமநுத்தமம் ।
படந்தியே த்விஜவரா : தேஷாம் ஸ்வர்கஸ்து ஶாஶ்வத : ॥

## பஞ்சாம்ருத ஸ்தோத்ரம்

(44வது பட்டம் ஸ்ரீமத் அழகிய சிங்கர் அருளிச் செய்தது)

மாலோலம் ப்ரணிபத்யாஹம் ஸ்வர்ணஸ்ரீந்ருஹரிம் ததா ।
மங்களாத்ரி ரமாசிம்ஹம் க்ருஷ்ணம் நரத்தநகோவிதம் ॥ 1

ஸ்ரீரங்கநாதம் ஹஸ்தீஸம் லக்ஷ்மீபுமிஸமந்விதம் ।
ஸேஷாசலோஸம் ஸ்ரீவாஸம் யாதவாத்ரி ரமாஸகம் ॥ 2

ஸ்ரீ பூஸாரபிரங்கேஸம் ஸ்ரீவராஹௌ ஹயாநநம் ।
பூமாதிகேஸவம் சக்ரம் கோதாம் வடதளேஸயம் ॥ 3

ஸஸீதாலக்ஷ்மணம் ராமம் அபர்யாப்தாம்ருதம் ஹரிம் ।
ஸ்ரீமூர்த்தீ: ஸ்ரீஸடாரீ ச ஸேநேஸம் ஸடமாதிநம் ॥ 4

பரகாலம் யதீந்த்ரம் ச வேதசூடாகுருத்தமம ।
ஆதிவண்ஸடகோபாதீந் யதிவர்யாந் பஜே஽நீஸம் ॥ 5

பஞ்சாம்ருதமிதம் புண்யம் ய: படேத் ஸததம் முதா ।
ரமாநரஹரிஸ்தஸ்ய தத்யாதீப்சிதமாதராத் ॥ 6

ஸ்ரீமதே ஸ்ரீவண்ஸடகோப ஸ்ரீவேதாந்த தேஸிக யதீந்த்ர மஹாதேஸிகாய நம:

சிங்கவேள் குன்றப் பெருமானை
''பஞ்சாம்ருத'' ஸ்தோத்ரத்தால் வழிபட்ட அயோத்தி மைந்தன்
சக்ரவர்த்தித் திருமகன்





## ஸ்ரீலக்ஷ்மீ ந்ருசிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம்

(44வது பட்டம் ஸ்ரீமத் அழகிய சிங்கர் அருலிச் செய்தது)

துஷ்ட்யை ஸதா பகவத்ஶ சரணாரவிந்த-
த்வந்த்வாவலம்பவிபவம் தவ மேடத்ய தேஹி ।
ஸ்துத்யை முகுந்த ஸுகுணார்ணவ ஸர்வபோக்ய !
லக்ஷ்மீந்ருசிம்ஹ! மம தேஹி கராவலம்பம் ॥ 1

ஸ்ரீதாபநீயவிதிதாத்ம மஹாப்ரபாவ !
லக்ஷ்மீஸமேத! சதுராநநருத்ரமுக்கயை: ।
ஸம்ஸேவ்யமாந சரணாம்புஜ! பக்தபோக்ய !
லக்ஷ்மீநந்ருசிம்ஹ! மம தேஹி கராவலம்பம் ॥ 2

யத் வத்ஸ ஸாது படிதம் கதயேதி புத்ரம்
ப்ருச்சத்யஹோ பிதரி நாமகுணாநுவாத: ।
விஷ்ணோரிதி ப்ரதிவதந்தம் அபாலயஸ்த்வம்
லக்ஷ்மீந்ருசிம்ஹ! மம தேஹி கராவலம்பம் ॥ 3

ஸந்தீபிதாக்நிவிநிபாதிததைத்யடிம்ப-
ஸம்ரக்ஷணாய விநிவர்த்திதவஹ்நிஶக்தே ।
பக்தாய தாருபரிகல்பிதபத்மதல்ப !
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம் ॥ 4

ப்ரஹ்லாதநாஶபரிசோதிதஸர்ப்பஜாத-
சூடாமணிப்ரவரதந்தவிநாஶஹேதோ ।
ஸ்ம்ருத்யா தவைவ ந விவேத தநும் ஸுபக்த :,
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம் ॥ 5

ஸ்ஓதாதிதத்தவிஷபாநஸமாநகால-
நாமாம்ருதேந பரிபாலிததைத்யபுத்ர।
ப்ரஹ்லாததேஹபரிரக்ஷணஜாகரூக !
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம் ॥ 6

ஸம்ருஷ்டதைத்யபதிசோதிததிக்கஜாதி-
கந்தாதிநாஶபரிதோஷிதபக்தடிம்ப।
பகதாபிபாலநவிசித்ர்விஶேஷதீக்ஷ !
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம் ॥ 7

ஶைலாக்ரபாக பதமாந ஹிரண்யடிம்ப-
ஸம்ரக்ஷணாய ம்ருதுபூத தராதிநாத।
தைத்யேந்த்ரபுத்ரஹ்ருதயாஸந மங்களாங்க !
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம் ॥ 8

விஷ்ணுப்ரபாவ பரிகீர்த்தநபத்தவைர -
தைத்யேந்த்ரபத்தஶிஸுபந்தநமோக்ஷஹேதோ।
ஷிப்தோऽர்ணவே தடமகாத் க்ருபயா தவைவ
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம் ॥ 9

பர்வேஷ்வஸெல வஸதி ஸர்வஶரீரவிஷ்ணு:
ப்ருஷ்டஸ்த்வயா விதித ஏவ புராऽப்யநந்த:।
இத்யுக்தவந்தமஸுராத் பரிரக்ஷசி ஸ்ம,
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம் ॥ 10

பக்தஸ்ய தாநவஶிஶோர் வசநம் ச ஸத்யம்
கர்த்தும் ததா முநிகணஸ்ய ஸமக்ஷமேவ।
ஸ்தம்பாவதீர்ண ! திதிபுத்ரவிநாஶகாரிந் !
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம்। 11

ஸந்தீபிதாக்நிபரிவேஷ்டிதகாஷ்ட்டமத்யம்
ஸம்ப்ராபிதாம் யதிதநும் த்வயஸாऽபி பத்தாம்।
ஸம்ரக்ஷசி ஸ்ம ஶரணாகதஶங்கரஸ் த்வம்
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம்। 12

உத்தாரணம் கலியுகேத்விதி தாபநீய-
ஶ்ருத்யுக்த ஏவ கருடாத்ரிபிலே ந்ருசிம்ஹ।
ஆவிர்பபூவித ஜகத்பரணாய யஸ்த்வம்
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம்। 13

காலே கலௌ து ஜகதாம் பரிபாலநாய
ஸ்வாராதகாந் யதிவராந் பரிக்ருஹ்ய பக்தாந்।
க்ராமேஷு ஸஞ்சரசி பக்திபராஶயஜ்ஞைஃஞ:
லக்ஷ்மீந்ருசிம்ஹ ! மம தேஹி கராவலம்பம்। 14

அதிவன் கடகோபஸ்வாமியும் மாலோலாம்
ஶந்நோ பவத்விதி ந்ருசிம்ஹகராவலம்ப-
ஸ்தோத்ரம் சகார நிகமாந்த குருர் யதீந்த்ர:।
ஸர்வஸ்ய புத்ரதநதாந்யஸம்ருத்திசித்தயை
தத்யாத் ரமாநாஹரி: ஸ்வகராவலம்பம்॥ 15

ஸ்ரீமதே ஸ்ரீவண்ஶடகோப ஸ்ரீவேதாந்த தேஶிக யதீந்த்ர மஹாதேஶிகாய நம:

## உஸ்தவ கால விவரங்கள் :

| | |
|---|---|
| தினந்தோறும் விஸ்வ்ருபஸேவை | 6.30 |
| நித்ய ஆராதனம் | 8.30 9.30 |
| ஸசஸ்ரநாம | 6.30 7.00 |
| பாராயணம் | |
| ஆராதன | |
| பானகாராதனம் | |
| நித்ய ஆராதனம் | 7.00 7.45 |
| பிறகு பவலி உடிஸ்தவம் (ஏகாந்த சேவை) | 8.00 |

பஞ்சபருவ உஸ்தவங்கள் :

1. சுவாதி, 2. ஏகாதசி, 3. அம்மாவாஸை 4. பௌர்ணமி 5. மாஸ பிறப்பு

நவராத்திரி, பவித்தோஸ்வம், கார்த்திகை தீபம், தனுர்மாஸம் (வைகுண்ட ஏகாதசி) பார் வேட்டை

பிரம்மோஸ்தவம், பாவனவாரம் உஸ்தவம், ந்ருசிம்மஜெயந்தி, ஆனிசுவாதி, புரட்டாசி மாதத்தில் ஸ்ரீ மதாதிவண், சடகோபரும் ஸ்ரீ வேதாந்த தேசிகள் உஸ்தவமும் நடக்கிறது, ஆடி திருவாடிப்புரம், ஸ்ரீ ராம நவமி - இராமானுஜ திருநஷத்திரம், ஆவணியில் கோகுலாஷ்டமி இவைகள் அனேந்தும் நமைபெறுகின்றன

### மங்கலம்

மங்களம் ஸ்ரீ ந்ருஸீம்மாய மஹனிய குரைப்தயே
கருடாத்ரீ நிவாஸாய நித்ய ஸ்ரீ நித்ய மங்களம்

**For details Please Contact**

**V.L.N. RAMANJAN** (Manager)
Sri. L.N. Swamy Devasthanam,**AHOBILAM**, Via. Allagadda,
KARNOOL Dist. - 518545,Ph : (08519) 252025 (O)

